[25th March 1961

(*c*) The Government have decided to give a loan of Rs. 8·75 lakhs and a grant of Rs. 9·39 lakhs to the Mettupalayam Municipality.

(*d*) Yes.

(*e*) The Government have sanctioned a Comprehensive Scheme of improvements to provide water-supply to Mettupalayam Municipality and Karamadai Panchayat. The capital cost of the scheme for the Karamadai Panchayat is Rs. 1·46 lakhs and Government have decided to give this amount as loan.

SRI T. S. RAMASWAMY : May I know when this work will be taken up?

THE HON. SRI M. A. MANICKAVELU : I think it is under progress, Sir.

*College education (Postal tuition and evening classes)*

*** 1090 *Q*.—SRI A. VEDARATHNAM :** *கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) நம் மாநிலத்தில் தபால் மூலம் அல்லது மாலை நேரங்களில் கல்லூரிப் படிப்புககு ஏதேனும் ஏற்பாடு செய்யப்படுமா ?*

*(இ) அபபடியானால், அதன் விவரமென்ன ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) This is a matter for the University to consider.

**SRI A. VEDARATHNAM:** *பிற மாகாணங்களிலெல்லாம் இம் மாதிரி கல்வி வசதிகள் செய்து கொடுக்கிறார்களே ? இதேபோன்று நம்முடைய மாநிலத்திலும் தபால் மூலம் இந்தக் கல்லூரிப் படிப்பு பெறுவதற்கு வசதி செய்தால், இங்குள்ள உத்தியோகத்தில் இருப்பவர்களுக்கும், ஏனையோர்களுக்கும் பெரிய அனுகூலமாக இருக்குமே ? நம்முடைய அரசாங்கம் இதை யோசித்து அவர்களுக்கு யோசனை கூறுவதற்கோ அல்லது நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதற்கோ இடம் இல்லையா ?*

**THE HON. SRI C. SUBRAMANIAM :** *தபால் மூலம் படிப்பதைப் பற்றி பல்வேறு கருத்துக்கள் இருக்கின்றன. கல்லூரிக்குப் போய் படித்தாலே போதுமான அளவு படிப்பின் தரம் உயரவில்லை என்கின்ற கருத்து இருக்கும்பொழுது, தபால் மூலம் படித்தால் எவ்வளவு தரம் உயரும் என்பதுபற்றி பல்வேறு பேர்கள் பல விதமாக நினைக்கிறார்கள். ஆகையினாலே இதில் சர்க்கார் ஒன்றும் நடவடிக்கை எடுப்பதாக உத்தேசம் இல்லை.*

**SRI K. ANBAZHAGAN :** *தலைவர் அவர்களே, தபால் மூலம் படிப்பது என்ற முறையிலே மாலை நேரப்படிப்பு என்பதும் சேர்த்து இணைக்கப்பட்டிருப்பதினால், தபால் மூலம் படிப்பதானாலும் மாலை நேரத்தில்தான் படிக்கவேண்டும் என்பது அரசாங்கத்தினுடைய கருத்தா ? (சிரிப்பு)*

**THE HON. SRI C. SUBRAMANIAM :** *இந்தத் திட்டம் அமுலுக்கு வராமல் இருக்கும்பொழுது, அந்தத் திட்டமா, இந்தத் திட்டமா என்று கேட்பது புரியவில்லை. தபால் மூலம் படிப்பதாயிருந்தாலும் சரி, மாலை நேரத்தில் படிப்பதாயிருந்தாலும் சரி,*

25th March 1961]

இரவு நேரத்தில் படிப்பதாயிருந்தாலும் சரி, இந்தத் திட்டத்தைப் பற்றி சர்க்கார் இப்பொழுது பரிசீலனை செய்வதாக உத்தேசம் இல்லை. இதைப்பற்றி சிபார்சு செய்வதாகவும் உத்தேசம் இல்லை.

SRI V. S. MANIKKASUNDARAM : பள்ளி ஆசிரியர்கள் 'பிரைவேட் காண்டிடேட்ஸ்' என்ற முறையில் யுனிவர்ஸிடி பரிட்சை எழுதி தேர்ச்சி பெறுவதற்கு ஒரு வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. அதே முறையிலே வேறு தொழிலில் ஈடுபட்டிருக்கக் கூடிய ஜனங்களுக்கும் இதே மாதிரி ஒரு வசதி அளிப்பதற்கு அரசாங்கம் முன்வருமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆசிரியர்கள் படிப்பிலேயே ஈடுபட்டிருக்கிறவர்கள். ஆகையினால் அவர்களுக்கு அந்த வசதி கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் அதை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள். வேறு தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு இந்த வசதி செய்து கொடுப்பது அவசியம் இல்லை என்பது கருத்து. பட்டதாரிகள் போதுமான அளவு இல்லாதது போலும், அதிக பட்டதாரிகளை உண்டாக்குவதற்கு எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற கருத்தில் இம்மாதிரி சொல்லுவதாகத் தெரிகிறது. இது அவசியம் இல்லாதது என்பது என்னுடைய கருத்து, தனிப்பட்ட முறையிலே.

SRI V. S. MANIKKASUNDARAM : நமது அரசாங்க காரியாலயங்களிலும், வேறு காரியாலயங்களிலும் வேலை செய்பவர்கள் ஏதோ சில குடும்ப அசௌகரியங்கள் காரணமாக மேலே காலேஜில் படிக்காமல் நின்று போய், அவர்கள் தங்கியிருக்கிற நிலைமையிலிருந்து முன்னேறுவதற்கு அது ஒரு தடையாக இருக்கிறது. அதனால் இங்கிருந்து எத்தனையோ பேர்கள் வெளி மாகாணங்களிலுள்ள யுனிவர்ஸிடிகளால் அளிக்கப்படும் இந்த வசதியை பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள் என்பது அரசாங்கத்திற்கு தெரியுமா? அப்படி மிக அதிகப்படியான பேர்கள் இருப்பார்களேயானால், அவர்களுக்கு நமது யுனிவர்ஸிடியிலேயே ஒரு வசதி ஏற்படுத்திக் கொடுக்க அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே அரசாங்கம் செய்யவேண்டிய காரியம் ஒன்றும் இல்லை என்று என்னுடைய பதிலிலேயே சொன்னேன்; 'This is a matter for the University to consider'. என்று சொன்னேன்.

SRI S. NAGARAJA MONEGAR : தரம் உயர்வு சரியாக இல்லை என்ற காரணத்திற்காக மாத்திரம் இந்தத் திட்டம் கைவிடப்பட்டிருக்கிறதா? அல்லது ஏற்கனவே எண்ணற்ற பட்டதாரிகள் இருக்கிறார்கள் என்ற காரணத்திற்காக இது கைவிடப்பட்டிருக்கிறதா? தரம் உயர்வுக்கு பரிட்சையை சற்று கடினமாக்கினால், தரமும் உயரக்கூடும், பட்டதாரிகள் ஏராளமாக வருவதையும் ஓரளவுக்கு சமாளிக்க முடியும். இதற்கு பதில் அறிய விரும்புகிறேன் (சிரிப்பு).

[25th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : அவரே பதில் சொல்லி விட்டார். அவருடைய கருத்தை நன்றியுடன் நான் தெரிந்து கொள்ளுகிறேன்.

SRI K. VINAYAKAM : Is the Hon. Minister aware of the fact that by students attending the evening classes held in Universities the standard has been deteriorating and they do not compare very well with the students who had put in attendance in the colleges? ' As such the Madras University has come to the conclusion that they will not change their present system.

THE HON. SRI C. SUBRAMANIAM : The hon. Member is giving information. I am glad to take that information.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

II.—PRIVILEGE MATTER *RE* PUBLICATION OF A MEMBER'S SPEECH IN "THINA SEITHI".

DEPUTY SPEAKER : The hon. Member Sri Anbazhagan has given notice of a matter of privilege which reads as follows :—

'கீழ்க்காணும் உரிமைப் பிரச்னையை சட்டமன்றத்தில் எழுப்பவும் உரிமைக்குழுவின் ஆய்வுக்கு விடவும் தங்கள் அனுமதி வேண்டுகிறேன்.

சென்னையிலிருந்து வெளிவரும் "தினச் செய்தி" ஏட்டின் 17-3-61 தேதியிட்ட பதிப்பில், 16-3-61 சட்டமன்ற நடவடிக்கையைப்பற்றி வெளியிட்டுள்ள செய்தித் தலைப்பில்— "தி.மு.க. மெம்பர் 'திமிர்' பேச்சின் விளைவு" என்றும், செய்தியில்— "அசெம்பளியில் இன்று க. அன்பழகன் (தி.மு.க.) பேசும்போது சபையில் கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டது" என்றும் காணப்படுகிறது. இவ்வாறு காணப்படும் செய்தி, உறுப்பினரை இழிவு படுத்துவதாகவும்—மன்றத்திற்கு குறைவு உண்டாக்குவதாகவும் உள்ளதால், இதனை ஓர் உரிமைப் பிரச்னையாக ஏற்று தக்க நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுகிறேன்.

DEPUTY SPEAKER : This matter of privilege has been given notice of by the hon. Member Sri Anbazhagan. In this connection I have to inform the House that in the House of Commons misrepresentation of the Members' speeches in Parliament is a breach of privilege of the House and the destruction of the freedom of Parliament. A misleading headline or a bannerline which is not supported by the text of speech is also considered to be a breach of privilege.

Freedom of speech in the Legislature is subject to the provisions of the Constitution and the rules of procedure. Similarly there are limitations on the freedom of expression by the press. The publication of the proceedings both of Courts of Justice and of Parliament are protected by privilege on the same ground—that the occasional inconvenience to individuals arising from it must yield